[21st August 1961

SRI A. A. RASHEED: What is the estimated cost of this housing project? Will this Colony accommodate the Southern Zone Police Force also?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: For the Southern Zone Police Force, that need not require special accommodation as such. For these quarters for the Special Armed Police the cost is Rs. 18,25,000.

*Caterpillar menace*

*1290 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் மதுரை ஜில்லா, உசிலம்பட்டி பகுதியில் கம்பளிச் பூச்சிகள் படையெடுப்பால் எத்தனை ஏக்கர் நிலக்கடலைப் பயிர் பாதிக்கப் பட்டது?

(இ) அதனுல் ஏற்பட்ட நஷ்டத்தின் மொத்த மதிப்பென்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) 12,397·75 acres.

(இ) Rs. 6·19 lakhs.

SRI N. R. THIAGARJAN: ஸார், மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் அந்தப் பகுதிக்குச் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தபோது, கிட்டத்தட்ட 20 லட்சம் நஷ்டம் ஏற்பட்டிருக்குமென்று சொன்ஞர்கள். ஆகவே இனிமேல் இவ்வாறு நஷ்டமேற்படாது இருப்பதற்கு, பாதுகாப்பு அளிப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது? எடுத்துக்கொள்ளப்போகிருர்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் கூறிய மதிப்பு பிறர் கூறுவதைக் கேட்டுச் சொன்ன மதிப்பாகும். உத்தியோக பூர்வமாக மதிப்பு எடுத்ததில் 619,000 என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது கம்பளிப்பூச்சி என்று சொல்லப் படுகிறது. இம்மாதிரித் தொல்லைகள் ஏற்படும் காலங்களில், அவ்வப்போது அந்தத் தொல்லைகளைச் சமாளிப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகிறது.

SRI P. K. MOOKIAH THEVAR: ஸார், நமது மின்சார இலாகா அமைச்சர் அவர்கள் அங்கு வந்தபோது, நஷ்டமேற்பட்டதைப் பார்த்து தக்க பாதுகாப்பு அளிப்பதற்கு பல காரியங்கள் செய்வதாகச் சொல்லி, அவைகள் பத்திரிகைகளில் கூட வெளிவந்தது. அந்தக் காரியங்கள் நடந்தேறியதா அல்லது இல்லையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அமைச்சர் அவர்கள் கூறியவைகள் எல்லாம் கவனிக்கப்பட்டு, நிறைவேற்றப்பட்டுத்தான் வருகிறது.

SRI N. K. PALANISAMI: கோவை ஜில்லாவில் பொள்ளாச்சியில் ஆகாய விமானத்திலிருந்து மருந்தை ஸ்ப்ரே செய்து ஒரளவுக்கு வெற்றி கண்டிருப்பதனுல், இதை மாகாணத்தில் வேறு இடங்களில் விஸ்தரிப்பதற்கு சர்க்காரிடம் திட்டம் இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எங்கெங்கு ஆகாய விமானத்திலிருந்து பூச்சி மருந்துகளை அடித்து பூச்சிகளை அழிக்க முடியுமோ அதில் கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது. பொள்ளாச்சியில் பூச்சி மருந்து அடித்தோம். ஆனுல் அங்கே கால் பங்கு பூச்சிகள் 'அண்டர்கிரௌண்டுக்கு' போய்விட்டன. (சிரிப்பு.) மறுபடியும் பருவ காலத்தில் வெளிவரும். அப்படி வெளிவருகிற பொழுது பூச்சி மருந்து தெளித்து எல்லாவற்றையும் சேர்த்து அழிக்க வேண்டும்.

21st August 1961]

SRI K. VINAYAKAM: May I know how the menace caused by these swarms of caterpillar was controlled. What were the steps taken to control such kind of menace? What is the cost involved for taking such kind of measures?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: We apply pesticides to kill these swarms. I cannot say what is the average cost per acre in combating these pests. Normally the ryot has to pay about Rs. 7 to Rs. 8 per acre.

SRI J. MATHA GOWDER: உருளைக்கிழங்கு பயிரில் கூட இதே மாதிரி பூச்சி பரவி அதனால் ஏராளமான நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இதற்காக அன்னிய நாட்டு நிபுணர்களைக்கூட தருவித்தோமே? அவர்களுடைய ரிபோர்ட்டு வந்திருக்கிறதா? இந்தப் பூச்சிகளை தடுப்பதற்கு சர்க்கார் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அன்னிய நாட்டு நிபுணர்கள் அங்கு அனுப்பப்பட்டார்கள். அவர்கள் பரிசீலனை செய்து இந்தப் பூச்சிகளை அடியோடு நீக்க முடியாது, இந்தப் பகுதி உருளைக் கிழங்குக்கே லாயக்கு இல்லை என்று சொல்லுவது தவறு' என்று அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். இந்த பூச்சிகளுடைய தொல்லையை தவிர்ப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்களோ, அவைகளெல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது.

SRI V. SUBBIAH: மொச்சை, தட்டை, பாசிப்பயறு போன்ற தானியங்களின் மகசூல்களில் அடிக்கடி கம்பளிப் பூச்சியின் தொல்லை ஏற்படுகிறது. இந்தப் பூச்சிகள் இந்தப் பயறு வகைகளை பாதிப்பதை அரசாங்கம் கவனித்து, அதைத் தடுப்பதற்கு ஏற்பாடு செய்ய அரசாங்கத்தினிடம் திட்டம் இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இதிலே அவ்வப்பொழுது ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகிறது. விஞ்ஞான ரீதியிலே என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள முடியுமோ அவைகளெல்லாம் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI N. K. PALANISAMI: இப்பொழுது விவசாய இலாகா கொடுக்கக்கூடிய மருந்துகளினால் பூச்சிகளை ஒழிக்க முடியவில்லை. காரணம் மருந்தை அந்த சமயங்களில் ஒரு தரம் அல்லது இரண்டு தரம் தூவ வேண்டும். பல பேர்களுக்கு பண வசதி இல்லாததன் காரணமாக அவர்களால் தூவ முடிவதில்லை. ஆதலால் மருந்து போட்டவர்கள், போடாதவர்கள் எல்லோருடைய நிலங்களுமே இந்த பூச்சி நோய் பரவி விடுகிறது. ஏற்கனவே பெஸ்ட் கண்டிரோல் ஆர்டர் என்று இருக்கிறது. அதை கலெக்டர்கள் அமுல் நடத்த வேண்டும். விவசாய இலாகா 'பவர் ஸ்ப்ரேயர்ஸ், டஸ்டர்ஸ்' எந்த அளவுக்கு எந்த ஏரியாவுக்கு எவ்வளவு வேண்டும் என்பதை கணக்கிட்டு மொபிலைஸ் செய்து 'பெஸ்ட் கண்டிரோல் ஆர்டரை' இம்ப்லிமெண்டு செய்து பணம் இருந்தாலும், இல்லாவிட்டாலும் சரி, கந்தாயத்தோடு அதன் விலையையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும் என்ற முறையிலே சர்க்கார் உத்தரவிட முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இவ்வாறெல்லாம் சர்க்கார் ஆலோசித்து அதற்குத் தகுந்தபடி விதிகளிலும் சட்டங்களிலும் மாற்றம் செய்வதுபற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது.

SRI R. SRINIVASA IYER: கம்பளிப் பூச்சியினால் கடலைப் பயிருக்கு நஷ்டம் ஏற்படுகிறது. ஆரம்பத்தில் இந்த கம்பிளிப் பூச்சி இருந்தால், பின்னாலே கடலைப் பயிரில் பலன் இல்லை என்ற அபிப்பிராயம் இருக்கிறது. ஆகையினால் கம்பளிப்பூச்சி எப்படி உற்பத்தி

ஆகிறது, இதை எப்படி 'பிரிவெண்டு' செய்யவேண்டும் என்ற ஆராய்ச்சி நடந்து வந்திருக்கிறதா ? அந்த ஆராய்ச்சி இப்பொழுது எந்த நிலைமையில் இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது ஆராய்ச்சி செய்ததிலே கம்பளிப்பூச்சிகளை ஒரு வயதான பிறகு கொல்லவே முடியாது என்று தெரியவருகிறது. ஆகையால் அதை எந்த நிலையிலே கொல்ல வேண்டும் என்பது கவனிக்கப்பட்டு, இது பரவியிருக்கும் பிராந்தியங்களில் ஆகாய விமானம் பயன்படுத்தி இதைக் கொல்லுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI P. K. MOOKIAH THEVAR : இந்தப் பகுதியிலே மந்திரி அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு பாதிக்கப்பட்ட மக்களுக்கு பாதி விலையில் விதைக்கடலை கொடுக்கப்படும், வரி வஜா செய்யப்படும் என்றெல்லாம் சொல்லிவிட்டு, ஒன்றுமே செய்யாமல் இருப்பது நியாயமா ? மந்திரியின் வாக்குறுதியை நிறைவேற்றாமல் இருக்கலாமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மந்திரி என்ன வாக்குறுதி அளித்தார்கள் என்பதுபற்றி தகவல் என்னிடம் இல்லை. அவ்வாறு உறுதியாக வாக்குறுதி அளித்திருக்க முடியாது விவரங்கள் இல்லாமல். அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது விவசாயிகள் தங்களுடைய குறைகளை, கோரிக்கைகளை தெரிவிக்கிறார்கள். அவர்கள் பரிசீலனை செய்வோம் என்று சொல்லுவார்கள். அந்தக் குறைகள் பரிசீலனை செய்யப்படுகின்றன. பரிசீலனை செய்யப்பட்டு சில முடிவுகளும் எடுக்கப்பட்டுவருகின்றன.

### *Kar paddy (destruction by birds)*

* 1291 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் கடற்கரை ஓர கிராமங்களில் பள்ளக் கால்களில் சாகுபடி செய்யப்படும் கார் நெல் மகசூலை "செரவி" என்னும் பட்சிகள் ஆயிரக்கணக்கில் வந்து ஆண்டு தோறும் அழித்து வருவதை அரசாங்கம் அறியுமா ?

(இ) அப்படியானால், அப்பறவைகளினால் சேதம் ஏற்படாமல் தடுக்க அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா ? அதன் விவரமென்ன ?

(உ) இல்லையானால், அத்தகைய முயற்சி ஏதேனும் எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) & (உ) Till recently, the Government have not taken any step in this regard as no incidence of this pest of alarming nature has so far been recorded. But these birds can be scared away by beating drums especially at nights when they are found to cause damage to paddy crops. It has been suggested that as these birds make a very delicious dish the "Shikaris" may be encouraged to shoot them. Instructions have been issued to all the District Officers concerned for the adoption of the above methods by enlisting the co-operation of the ryots through the village panchayats.

SRI A. VEDARATHNAM : இந்தக் கடற்கரை பகுதிகளில் உள்ள கார் மகசூல் 3 அடி, 4 அடி தண்ணீரில் நடக்கிறது. இந்தப் பறவைகள் கம்பளிப் பூச்சிகள் போல் அண்டர்கிரௌண்டிலிருந்து வருவதில்லை. பத்தாயிரக் கணக்கில் ஆகாயத்திலிருந்து வந்து அந்த இடத்திலே மகசூலை அழித்துவிடுகின்றன. கால்படி தானியம் கூட கிடைப்பதில்லை.